# ஸ்ரீ பகவத் கீதைத் தாலாட்டு



சுத்தாத்வைதி அருட்கவி

விலக்ஷணானந்த ஸ்வாமிகள்

ஓம்

# ஸ்ரீ பகவத் கீதைத் தாலாட்டு

இஃது
தேவார நகரம்
சுத்தாத்வைதி அருட்கவி
**விலக்ஷணானந்த ஸ்வாமிகள்**
அருளிச் செய்தது

பதிப்பாசிரியர்
**டாக்டர் திருமதி அனந்தகிருஷ்ணா**
16/12, டானியல் தெரு, ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.
☎ : 2245 0119 அலைபேசி : 92821 04459

-: ஓம் தத் ஸத் :-

# ஸ்ரீ விலக்ஷணானந்த பரமாத்ம ஸ்வரூப வர்ணனையும் ப்ரார்த்தனையும்

ஆசுர பயங்கர நிவாரணா துரிதவீர ஆதிமத்யாந்தரஹிதா
அனவரத கல்யாண குண கண விபூஷிதா அகிலாண்டகோடி நாதா
அற்புத விலக்ஷணானந்த பரிபூரணா அகணிதாகார வடிவே
அசல நிற்குண சகுண வாசாமகோசரா ஆனந்தகர நிவாசா

பாச பவநாச சருவேச பசுபதி சாப பரிகார பரமேஸ்வரா
பதிதபாவனா சமய பரிபால சுபசரித பாவனாதீத படனா
பாத்மலோசன பளித பாடீர வாசானு பாக காம்பீரவதனா
பாதானுஜா உபய வேதாந்த சிந்தாந்த பாரிபாஷானுசாரா

தேச காலாத்த தேஜோன்மயாஉசித சிகார சின்மய ரூபனே
ஜெக விபரிதச்சூதை யகல்பவர் மனப்பாதை திகழ்தரு திருக்கீதையாய்
சிமையவள மலிசேஷ கிரிவாச நவஜனித திவ்ய பரிமள விலாசா
தீரவவதார துளவார சுகுமார வசுதேவ வந்தன உதார

வாசக புரந்தர நிரந்தர சுதந்தரா வரத கோபால மணியே
மதுர ப்ரவாக கோமளவாங்க நவரத்ன மகர குண்டல பூஷணா
மனாதீத மார்த்தாண்ட கோதண்டபாணி சுக மார்க்க வடியேனை யருளால்
மாயாவிகார சஞ்சித வினையில் வைக்காமல் வாழ்விப்பதுன் கடமையே.

துலங்கு வடபத்திரமுந் தூய திருப்பாற் கடலுந் துறந்தே யன்பர்
கலங்குமுள வஞ்ஞான விருளகற்ற ஞான திவாகரனாத்தோன்றித்
தலங்குளிருந் திருமாலாம் விலக்ஷணானந்தரிரு சலசமேபோல்
நலங்குலவுந் திருவடியைச் சாஷ்டாங்கமாய்ப் பணிந்து நாமுய்வோமே
க்ஷீராப்தி ஸ்ரீனிவாசாய ஸ்ரீ வேங்கடேசாய மங்களம்.

மாசிலமணியே போற்றி! மாமறையாளா போற்றி!!
தேசுருகனியே போற்றி! தெகிட்டிடா அமிர்தே போற்றி!!
காசினியோர்க் கொட்டாத கற்பகமலரே போற்றி!
வீசுவேதாந்தா போற்றி! விலக்ஷணானந்தா போற்றி!!

-: ஓம் தத் ஸத் :-

ஓம் தத் ஸத்

# ஸ்ரீ பகவத் கீதைத் தாலாட்டு

1

சீராரும் பரமார்த்த தெரிசனத்தை யருள்செய்ய
பேராருநீ தேசிகனாய்ப் பெருமா னேவந்தவரோ.

2

திருத்தேரிற் சாரதியாய்ச் சேர்ந்திருந்துங் கீதையினா
லருச்சுனற்கு மெஞ்ஞான மனைத்து முறை செய்தவறோ

3

செஞ்மறிற்ப ந்துதிஜனம் சேதம்வருமென்றி ரங்கி
அஞ்சின பார்த்தன் பயமாங் ககற்றவரு ளானோக்கி

4

சுற்றமறிற் சோகமெனச் சொல்லினைச் சற்றறிந்தவன்
போற் கற்றுணர்ந் துபேரதனாற் கலங்கார் காணெ ன்றவறோ

5

கலங்காறோவிற் புவறிற் கற்றுணர்ந்த பேரேனு
மலங்காமனா னிருக்கு வகையு ரையு மெனவினவ

6

நீயுநானும் புவி மேனிரு பவர்களு மெய்யுணர்வால்
ஆயுங்காற் பிறந்திறப்பதாற்கு மிலையென்ற வறோ

7

ஈங்கெவற்கும் பிறநீதிறஃதில்லையென்றீ ரிவ்வுலகில்
நீங்குபவ மார்க்கி தனை நிச்சயமாய்ச் சொல்லுமென

8

இத்தரையிற் பிறந்திறபே தெடுத்தவுடற் கடுத்தபொறி
நித்தியமாகிய வான்மா நின்சொரூப மென்றவறோ

9

அங்கமுயிரி ந்தியநானன்றி வேறெனைக் காணேன்
இங்கியான் வேறுண்டே லெனக் கரியச் சொல்லுமென

10

மெய்யுயிரி ந்தியங்களால் வேறறியெனென்றவனைப்
பையவவையாலறிய படானுநீ யென்றவறோ

11

தேகம் வேறாகிலதைச் சேர்ந்த திவனே தெனவே
சோகமே வினைகருமத் தொடர்ச்சியி னாலென்றவறோ

12

தேகமெடாமுன் கருமச் செயல்வருமா றேதெனவே
ஏகமாமரமும் வித்து மெனுமுறை போலென்றவறோ

13

காயமுந்தானும் பிறிதேற்கன்ம மெவர் செய்ததெனா
தீயவுடற் கலதுகன்மச் செயறனக்கே தென்றவறோ

14

உடர் கருமமுடல் செய்யில் பலமுறுவ தார்க்கெனவே
இடர்பலமுமுடற் கேயா மறிவாற்கே தென்றவறோ

15

வெய்யவினையுடற் கென்றால் மெய்யிங்கே விடிவான்மா
வையமற நரகசுவர்க்க மனுபவிப்பதே தெனவே

16

அனுபவமே யிலையது வீணாசோபித நிகழ்த்திற்
றனுகரணச் செயல் தனதாய்ச் சார்வதுபோ லென்றவறோ

17

மற்றுடலின் செய்கைதன்மேல் வருமயக்கம் ஏதனவே
முற்றுணர்வொன்றில்லாத மோகமென்று சொன்னவறோ

18

அறிவு தேகம் தனக்கோ ஆன்மாவிற்கோ வெனவே
பிரிவு செயில் அசித்துடலம் பிரம்மறி லென்றவறோ

19

தேகம் அசித்தாகிலிந்த செயல் வருமாறே தெனவே
ஏகபரம் சோதியின்முன் இருக்கையினா லென்றவறோ

20

இருக்கினும் அசேதனத்தக்கு இச்செயலுண்டோவெனவே
உருக்குவடாகாந்த முன்னில் ஊசிநிகர் என்றவறோ98

21

சொன்ன செயல்உடற்கானால் சுகதுக்கம் ஆர்கெனவே
அன்னசுக துக்கமும்தான் அவ்வுடற்கே என்றவறோ

22

சேதனமாம் ஆன்மாவை சேராத துக்கசுகம்
ஓதுஜெட மாமுடலை உற்றிடுமோ சொல்லுமெனா

23

பூதமைந்தோ டைந்துயிர்கள் புலன்கள் பத்தும் மனமுதல் நான்கும்
ஈதிறுமெய் இதில் மனத்துக்கின்ப துன்பம் என்றவறோ

24

இந்தயிறு வகைதனிவிற் கேதுயே தெனவினவ
முந்திய காரணமதனால் மூன்றுதனு வென்றவறோ

25

மனமறியும் துக்கசுகம் வரலென்றீர் அம்மனமும்
வினவில சேதனமலவோ விரித்தெனக் குவிளம்புமென

26

அம்மனத்தில் ஆன்மா அபேதம்போல் தோன்றுதலால்
விம்மு சுகதுக்க மனம் மேவுமென்று சொன்னவறோ

27

அந்த மனோதுக்கசுகம் அதனிடத்தின் நில்லாமல்
வந்திலங்கு மான்மாவை மருவியதெனி சொல்லுமென

28

வையகனலின் சூடு மேல்வைத்த சட்டியினூடு
உய்ய புனலூடு வத்தங் கொன்றுதற்போல் என்றவறோ

29

சித்தாகு மான்மாவும் சடமாகும் சித்தமும்தான்
ஒத்தாங் கிரண்டுமொன்றாய் உற்றவகை உரையுமென

30

வல்லிரும்பு கனலுடனே மருவியது போற்மனமும்
ஒல்லையிலான் மாவுடனே உற்றதுகாண் என்றவறோ

31

உற்றதெ தனாலனவே உள்ளமவி வேகமுறப்
பற்றியதன் மேலுமதன் பண்புவந்த தென்றவறோ

32

அடுத்த குணம் போமோ பின் ஆன்மாவை விட்டெனவே
எடுத்த செம்பூ நிறம்படிகத் தேருதல் போலென்றவறோ

33

சுத்த படிகம்போற் சொரூப மாய்த் தானிருக்க
மெத்த வுமாசாமலின மேவியதென் சொல்லுமென

34

அனாதியாம் வாசனையால் அடைந்ததா காமலினம்
மனோபந்த மிருக்கில் முக்தி வாராதென் றுரைத்தவறோ

35

பந்தமெது முக்தியெது பகுத்துரைக்க வேண்டுமென
சிந்தைதெளிய வென்று திருத்தாளினை வணங்க

36

தேகாதிதா னெனவே சேராபிமானங்கள் பந்தம்
ஆகாத மானம்விடில் அரிய முக்தி என்றவறோ

37

அபிமானம் வரும் வகையும் ஆங்கதனை தீர்வகையும்
தவியாமல் நானறிய தயவாகக் கூறுமென

38

மறந்திடும் அஞ்ஞானத்தால் மனம்வந்தது தஞ்ஞானம்
இறந்துவிடில் மானமும்போம் என்னுமுணர செய்தவறோ

39

அந்தமுறை அஞ்ஞானம் அணுகுவதும் போவதுவும்
சந்தய மில்லாதறிய சாரதியே கூறுமென

40

அஞ்ஞானம் வந்தனாதியது சொல்வதல்ல
மெஞ்ஞானம் வந்தாலது விடுமென்று ரைத்தவறோ

41

இரவி யெதிரடுத்துவந்த இருட்போல அஞ்ஞானம்
வரவிதியோ ஜோதிதன்பால் வந்தவகை ஏதெனவே

42

அந்தஅறிவு வந்தால் அஞ்ஞான மில்லையப்பாற்
சந்ததமும் ஆனந்த சாகரம்காண் என்றவறோ

43

வேதாந்தத்தாற் குருவாற் மெஞ்ஞானம் வந்தவுடன்
தீதான துக்கசுகம் தீராத தேதெனவே

44

பற்றருமோ துக்கசுகம் பரோட்ச ஞானத்தாலே
அற்றமாம் அவ்விரண்டும் அபரோட்சத் தென்றவறோ

45

பரோட்ச மபரோட்சமெது பகுத்துரைக்க வேண்டுமென்றன்
விரோதமாம் புத்திநன்றாய் தெளியும்படிக் கெனவே

46

பகர்ந்த சுத்தஞானம் பரோட்சம னுபவித்தால்
அகம்பிரம மெனும்ஞானம் அபரோட்ச மென்றவறோ

47

தான்பிரமமென் றறிந்தும் தனுவைத் தானென்ற புத்தி
ஏன்போகவில்லை அதை எனக்கறியச் சொல்லுமென

48

கேள்வியினால் மனனத்தால் கிளர்ந்த யோகங்களினால்
ஆன்பிரமத்தனுபவம் வந்து அதுதீரு மென்றவறோ

49

ஆதியாம் சிற்சொரூபம் ஆகாத தாலினிமேல்
சோதி மனனாதியினால் சொரூப மாமோவெனவே

50

எப்போதும் சின்மையந்தான் எனல் மறந்து தேடுவது
செப்புமிடற் றணியிருக்க தேடுவ போலென்றவறோ

51

தேடியபின் தேகபுத்தி தீர்ந்துபோய் சிற்சொரூபம்
கூடுவ நோயானென் குறைதீரச் சொல்லுமென

52

வந்தவுடல் வேறாயும் வாசனையாற் தானெலால்
சந்தய மென்றச்சொரூபம் தானாதற் கென்றவரோ

53

தனுவைத்தானெனு பிரமை சுத்த ஞானத்திலரு
அனுபவமெஞ் ஞானத்தால்அரும் வகைஏது ரையுமென

54

விளக்குவிளக் கெனுமதனால் வெய்யவிருள் போய்விடுமோ
துளக்கமில்லா விளக்கேற்றில் தொலையுமிருள் என்றவறோ

55

நெடுஞ்காலம் ஆன்மாவை நீங்காத அஞ்ஞானம்
விடுங்காலம் என்னாளோ மெஞ்ஞானத் தாலெனவே

56

அந்தகாரக் குகையில் ஆயிரநாள் இருந்தாலும்
செந்தீபம் கண்டவுடன் தீர்வதுபோல் என்றவறோ

57

கருமயோகந் தவமே காரணமா நீங்காமல்
அருமையா ஞானம் வந்தோ வஞ்ஞானம் போமெனவே

58

குத்தும்வெட்டும் படைகளினாற் கூடுமோ விருளறக்க
உத்தமமாம் ரவியுதித்தால் ஓடுமிரு ளென்றவறோ

59

அஞ்ஞான விருகுறக்க வறியாத நல்ல கன்ம
மெஞ்ஞானநீ தனைப்பரிக்கும் விதமெவ்வாரென வினவ

60

இந்திரஜாலம்போல இவ்வுலகை நம்மிடத்திற்
தந்திரமாய்த் தோற்றுவித்தோம் சத்யம் வென்றவறோ

61

மித்தையெனுஞ் சகத்து நின்பால் விளங்குமோ வெனவினவ
சுத்தி தனிலிரசதநீதான் தோன்றுதல் போலென்றவறோ

62

அயல் வெள்ளிசுத்தியின் மேலா சோபிதங்கூடு
இயலுள்ள சுகமுமுன்வே ரிருந்தது ண்டோவெனவே

63

மனமயக்கம் பிடிக்கில்லா வத்துவுந் தோன்றிடு மெதுவோ
கனவில் விண்ணிற் றான்பறக்க க்கண்டது போலென்றவறோ

64

கனவுபோற் பிரபஞ்சமென்றீர் கண்விழித்தாற் கனவு பொய்யாம்
வினவு சகநீ தினமும் மெய்யாய்விளங்கு வதென் சொல்லுமென

65

மெய்யாக விளங்குவது மெஞ்ஞானம் வருமளவும்
பொய்யாம் பின்கனவதுபோற் போதம் வரிலென்றவறோ

66

முன்புகண்ட கனவுபொய்யாம் முழிச்சாக்ரம்போல வென்றீர்
பின்பு முத்தி தசையடையநீ தும் பிரபஞ்ச நிற்பதேதெனவே

67

தெரிந்தவற்குத் தோற்றுவது தத்தபடம்போல் வந்தலால்
பரநீத சகங்காரியத்திற் பயன் படாதென்றவறோ

68

கன்மவினையஞ் ஞானங் கடந்து மதன் காரியமாம்
இன்மையுறு மெய்யுடனே போகாத தேதெனவே

69

வெட்டவிழு மரம் பசந்து விளங்குதல்போற் சில காலம்
நட்டகன்ம மாய்நீது மங்க நடத்திடுங்கா ணென்றவறோ

70

சென்மம்போய் முக்தியினைச் சேரச் சிலரிருக்கத்
தொன்மையான்மா பலவோ சொரூபம் பகருமென

71

பிரமமென்று மீசனென்றும் பெருகுபல ஜீவறென்னும்
உரைமயக் கமலதான்மா ஒருவனே யென்றவறோ

72

ஏகந்தானான் மாவெனும் வகையே மெய்யானால்
ஆகந் தோறும் பலவாயமர்ந்த தென்னோ சொல்லுமென

73

பலகடதிற் சலத்தூடு பானுவிம்பந் தோன்றுதல்போல்
தொலைவில் புத்திதொறு மான்மாத் தோன்றுதல் காணென்றவறோ

74

ஆதித்தன் போலான்மாவளவில் புத்திதொறுந் தோன்றில்
சாதிக்கு முந்தேயெவர் தமக்கதனைச் சாற்றுமென

75

பந்தமுக்தி தானுமந்தம் பரந்த புத்திதனக் கேயாம்
அந்தவிம்ப நீதனக் குலையென்றறிவு வரச்சொன்னவறோ

76

பரமேக மாயுமதிற் பலசீவரே தெனவே
ஒருகடலிற் பலகுமிழி யுதிப்பதுபோ லென்றவறோ

77

சீவனதுதானென்றும் சேரும் பிரம மென்றும்
ஆவதுவோ பேரின்பமாங்க தெனச்சொல்லு மென

78

ஏகப்பிரம மிரண்டிலை நீ வேறுமல
ரோகமுறும் பேதமறிற் றோன்றுமின் பமென்றவறோ

79

சீவபேதம் போமோ சித்தொன்றா மோவெனவே
யாவர்மனமனுஞ் சுழுத்தி யவத்தையிற் பாரென்ற வறோ

80

பேதமல விவ்வுலகம் பிரம்மமய மென்றறிந்தும்
பூதமயமாயத் தோற்றல் போகாத தேதெனவே

81

கானலை நீரென்றோடிக் கண்டவற்குத் தீர்ந்தபின்னும்
வானுலவு நீராகி வயங்குதல்போ லென்றவறோ

82

அறிவானுநல் லறிவுமறி யப்படும் பொருளும்
பிறிவாய் மூன்றாயிருத்தல் பேதமல வோவெனவே

83

சொற்பனத்திற் றனித்தொருவன் தோற்றம் வேறில்லையங்கே
கற்பனையாம் பொருளறிவுகாண் பவன்போ லென்றவறோ

84

கற்பனையாம் பேதங்கள் காணாமற் போம் வகையை
விற்பனமா நானறிய விளம்புமெனவே வணங்க

85

துரியமாம் யோகத்தாற் றூயமனம் லயமானால்
அரியமூவகை விகற்ப மழியுமென்று சொன்னவறோ

86

சிறந்திருக்கு மான்மாவு ஞ்செகமெல்லா நிறைநீயிருந்து
மறைநீ தெனக்குத் தோற்றாத வகையே சொல்லுமென

87

சத்துச்சித் தானந் தான்மூன்று மதனுடனே
யொத்துற்று நாமவு ருவஞ் சகமாகி

88

இருக்கையினிற் னோற்றா திவைமூன்றும் பிரமமென
மரிக்குல் வருபின்னிரண்டு மறிசகமென் றுரைத்தவறோ

89

அறிந்துகொள் ஞானத்தாலே யான்மாவை யென்றுரைத்தீர்
சிறந்தொன்றிருமான் மாவுந்திரு சியமா மோவெனவே

90

முந்திய ஞானத்தாலே முதிருமஞ்ஞானநீ துறக்கில்
சிந்தை யிலான்மாச் சுயமாய்த்திகழுமுமென்று சொன்னவறோ

91

இனியமுத்திச் சுகமிரும்ப தெப்படியென் றேவினவ
அனுபவத்தி லறிவிடயானந் தம்போ லென்றவறோ

92

மனலயம் வந்தவரலது மற்றிலனோ முத்தரெனச்
சனகனைப்போற் சீவன் முத்தர்தாமுமுள ரென்றவறோ

93

சீவன்முக்தியடைந்தோர்கள் செயலு மவர்த்தங் குணமும்
நாவுரைகும் வாசகமு நானறியச் சொல்லுமென

94

வருங்கருவு பிறப்பினொடு வளர்தல் பருத்தல் குறைதல்
ஒருங்கலு மெய்க்கென்ற தனை ஒருத்தி ருப்பா ரென்றவறோ

95

பார்ப்பது வுங்கேட்பதுவும் பகர்வதுவுஞ் செல்வதுவும்
ஏற்பதுவு ங்கரண தன்ம மெனத் துணிவா ரென்றவறோ

96

பசிதாகமுயிற்க்கெனவே பயந்துக்கஞ் சுகங்காமம்
வசிகோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பா ரென்றவறோ

97

வீடுந் தாரமுமுறவு மேவியென்று மிருந்தாலும்
நீடுந் தாமரையி லைநீர் நிகராவா ரென்றவறோ

98

பற்றிடுங் காயமும்நீ தானும் பன்னாளொன்றாயினும் பின்
உற்றபுளி யம்பழமு மோடுமொப் பாரென்றவறோ

99

கூறுமுலகியற் கையுடன் கூடினுமெஞ்ஞானம் வந்தோர்
சேறும்பிள்ளைப் பூச்சியும் போற்றிறிவார் காணென்றவறோ

100

ததியூடு கடைந்து வெண்ணை தான்மோறிற்கிடப் பதுபோல்
மதியூடு கூடினும்பின்மயங்கார் காணென் றவனோ

101

அருச்சுனன்றன் பொருட்டாக அனைவருக்கும் ஞானம்வர
பொருந்தியதிற் பரவடிவாம் புண்ணியரே கண் வளரீர்

102

ஆயர்குல மாதரளவிலோரைப் புணர்ந்தும்
தூயபதினாயிர வருடன் தோய்ந்தி ருந்தும்

103

பரமமுனிவர் முன்னே பரிக்ஷித்தைத் தீண்டியன்று
பிரமசரியஞ் செலுத்தும் பேரொளியே கண்வளராய்

104

பரமாத்மா மஹரிஷியார் பகருமிந்தத் தாலாட்டை
உரமாக உள்ளுணர்வா ருலகினி லேபிறவாரே.

-: ஓம் தத் ஸத் :-

# பிரம்ம சாக்ஷாத்காரம்
# ஜனன மரண நிவர்த்தி

பரிசுத்தம் எங்கே உதயமோ
அங்கே பக்தி உதயம்
பக்தி எங்கே உதயமோ
அங்கே அன்பு உதயம்
அன்பு எங்கே உதயமோ
அங்கே சாந்தம் உதயம்
சாந்தம் எங்கே உதயமோ
அங்கே சக்தி உதயம்
சக்தி எங்கே உதயமோ
அங்கே ஞானம் உதயம்
ஞானம் எங்கே உதயமோ
அங்கே கிருபை உதயம்
கிருபை எங்கே உதயமோ
அங்கே கடவுள் உதயம்
கடவுள் உதயம் பெற்றவர்
கடவுளே ஆகிறார்.

- **விலக்ஷணானந்தர்**

# ஸ்ரீ பகவத் கீதைத் தாலாட்டு



சுத்தாத்வைதி அருட்கவி

விலக்ஷணானந்த ஸ்வாமிகள்